


மலர் 16 இதழ் 101]

# போர்

## 'வி. கே. கிருஷ்ணமேன
## நாட்டிடம், மாருத உள்ளன்பு

### மக்கள் சபையில் பிரதமர் பாரா

புதுடில்லி, நவ. 27—

இன்று மக்கள் சபையில் பிரதமர் நேருபேசுகையில், பாதுகாப்பு மந்திரி வி. கே. கிருஷ்ணமேனனின் தேசபக்தியையும் நாட்டிடம் அவரது உள்ளன்பையும் அவரது திறமையையும் பாராட்டினர். நேரு தொடர்ந்து கூறியதாவது:

"இன்றுள்ள சூழ்நிலையில் மேனன்—திம்மையா சர்ச்சையைப் புதுப்பித்தால் நாட்டிற்கே தீமையாக முடியும். ஆகவே அந்தச் சர்ச்சையைப் புதுப்பிக்க வேண்டாமென்று இச்சபையினரையும் மக்களையும் கேட்டுக் கொள்கிறேன்.

"விவாதத்தின்போ
காப்பு மந்திரி பற்றி சில
பிட்டனர். ஒரு மந்தி
பற்றியோ சர்க்காரைப்பற்ற
தமது கருத்தை வெளியிட
வொரு உறுப்பினருக்கும் உ
உண்டு. அந்த உரிமையை ந
ஆட்சேபிக்கவில்லை. அந்த உரிமை
யைத் தவருன நேரத்தில் பிரயோ
கித்தால் தவருன விளைவுகளே
ஏற்படும். உரிமையைச் சரியாக
பிரயோகம் செய்ய வேண்டும்.
நபர்களைப் பற்றி பேசுவது தா
சங்கடமானது."

நு ஆ

புதுடில்லி,
சீன-இந்திய எல்லைத்
மத்யஸ்தம் செய்து
சோவியத் யூனியன் ஒன்
வில்லை என்று பிரதம
இன்று மக்கள் சபை
கேள்விக்கு பதிலளிக்
கூறினர்.

# இந்தோனேஷிய தொழிற்சங்க இயக்கத்தின் முன்னேற்றம்

## போலீஸ்காரருக்குக்கூட தொழிற்சங்க உரிமை உண்டு

### நகர தொழிற்சங்க கவுன்சில் வரவேற்பில் இந்தோனேஷிய தலைவர்கள்

சென்னை நவ. 27—

"எங்கள் நாட்டிலிருக்கும் 80 லட்சம் தொழிலாளரில் 40 லட்சத்துக்கு மேல் தொழிற்சங்க ரீதியாக அணிவகுத்து நிற்கின்றனர். எங்கள் நாட்டில் போலீஸ்காரர் உட்பட உழைத்து பிழைப்பவர் அனைவரும் தொழில் வழியாக நிறுவப்பட்ட தொழிற்சங்கங்களில் சேர்ந்து உரிமைக்காக போராடுகின்றனர்".

இவ்வாறு இந்தோனேஷிய தொழிற்சங்க தலைவர் தோழர் அசாதிஜத் நேற்று மாலை நகர தொழிற்சங்க கவுன்சில் அளித்த வரவேற்பில் பேசுகையில் கூறினர்.

ஐ. நா. கலாசார ஸ்தாபன ஆதரவில் இந்திய தொழிற்சங்க அமைப்பு பற்றி ஆராய்ச்சி நடத்த வந்திருக்கும் இந்தோனேஷிய தலைவர்கள் தோழர் அசாதிஜத் தோழர் ஹரிஸானே இருவருக்கும் நகர தொழிற்சங்க கவுன்ஸில் இந்த வரவேற்பை ஏற்பாடு செய்திருந்தது. நகர தொழிற்சங்க ஸ்தாபனங்களின் சார்பில் ஏராளமான பிரதிநிதிகள் வந்திருந்தனர்.

நகர தொழிற்சங்க கவுன்சில் தலைவர் தோழர் டி. எஸ். ராமானுஜம் கூட்டத்திற்கு தலைமை வகித்து இந்தோனேஷியத் தலைவர்களை அறிமுகம் செய்துவைத்தார்.

#### அசாதிஜத்

தோழர் அசாதிஜத் பேசுகையில் கூறியதாவது:

இந்தோனேஷிய விடுதலைப் போராட்டத்தில் தொழிலாள வர்க்கத்தின் பங்கு மிக முக்கியமானது. டச்சுஏகாதிபத்தியவாதிகளின் கொட்டத்தை அடக்க ஆயுதம் ஏந்தி புரட்சி நடத்தினர் இந்தோனேஷிய மக்கள். இந்தப் புரட்சியின் தாக்குதலை சமாளிக்க முடியாமல்தான் 1945-ல் டச்சு ஏகாதிபத்தியம் நாட்டை விட்டு ஓடியது. இன்றும்கூட எங்கள் விடுதலை முழுமை பெறவில்லை. மேற்கு இரியனிலிருந்து வெளியேற டச்சு ஏகாதிபத்தியவாதிகள் இன்னமும் மறுத்துவருகிருர்கள். ஆனல் அவர்களை வெளியேற்ற நடக்கும் எந்தப் போராட்டத்திலும் கலந்துகொள்ள தொழிலாள வர்க்கம் தயங்காது.

#### வீர பரம்பரை

எங்கள் நாட்டு தொழிலாளர் போராட்ட பரம்பரை வீரம் செறிந்தது. உதாரணமாக சமீபத்தில் நடந்த ஒரு நிகழ்ச்சியை குறிப்பிட விரும்புகிறேன். இந்தோனேஷியாவில் இயங்கும் டச்சு கப்பல் கம்பெனிகளை தேசியமயமாக்கும் திட்டம் ஒன்றை 1955-ல் சர்க்கார் கொண்டுவர இருந்தனர். இதை முன்னதாகவே தெரிந்து கொண்டு டச்சு கப்பல்களை இந்தோனேஷியத் துறைகளை விட்டு அகன்று சிங்கப்பூர் மற்ற வெளிநாட்டு துறைகளுக்குப் போகும்படி டச்சு சர்க்கார் ரகசிய உத்தரவுகள் அனுப்பியது. துறைமுகத்தொழிலாளர், கப்பல் தொழிலாளர் அனைவரும் தொழிற்சங்க ரீதியாக ஒன்
பட்டு இருந்தனர். எனவே,
தச் சதியை முறியடிக்க ஒ
பட்டனர். இந்தோனே
கடல் எல்லையை விட்டு நீ
வண்ணமே கப்பல்களைத் த
நிறுத்தினர். டச்சு மேல
களைக் கைது செய்து, நடுக்
லுக்குப் போன கப்பல்க
திருப்பி நாட்டின் துறைமுகங்
களுக்கே ஓட்டி வந்தனர்.

#### தொழிற்சங்க அமைப்பு

எங்கள் நாட்டு 80 லட்சம் தொழிலாளரில் பாதிக்குமேல் பலம் வாய்ந்த தொழிற் சங்க உறுப்பினர்கள்.

தொழில் ரீதியாக தொழிற்சங்க ஸ்தாபனங்கள் இயங்குகின்றன. மிகவும் பலம் வாய்ந்த தொழிற்சங்கம் தோட்டத் தொழிலாளர் சங்கம். இதிலும் கரும்புத் தோட்டத் தொழிலாளர் சங்கம் போராட்ட சக்திவாய்ந்த ஸ்தாபனமாகும். சர்க்கார் துறை, தனியார் துறை இரண்டிலும், தொழில் ரீதியாக தொழிற் சங்கங்கள் இயங்குகின்றன. எங்கள் நாட்டில் போலீஸ்காரர்கள் கூட தொழிற்சங்க ரீதியாக ஒன்றுபட்டிருக்கின்றனர். சர்க்கார் சார்பில் வழக்குகள் நடத்தும் வக்கீல்களுக்குக் கூட தனித் தொழிற்சங்கம் இருக்கிறது!

பெரிய சங்கம் பலம்வாய்ந்த சங்கம், தொழில் வழிப்பட்ட சங்கம், இவைதான் இந்தோனேஷிய தொழிற்சங்க வளர்ச்சியின் அடிப்படை.

எங்கள் தொழிற்சங்க பலம் ஒற்றுமையால் ஏற்பட்டது. சில தொழிற்சங்கங்களில் தலைவர்கள் முழுநேர தொழிற்சங்க அலுவலகங்களில் ஈடுபடுவதை சர்க்காரே அனுமதித்துள்ளது! சம்பளம் கொடுப்பது சர்க்கார், உழைப்பின் பலனை பெறுவது தொழிற்சங்கங்கள்! இருந்தாலும் நாங்களும் போராடித்தான் இன்னும் உரிமைகளை பெறவேண்டியிருக்கிறது.

ஒன்றுபட்ட தொழிற்சங்க பலத்தால் பல சலுகைகளை பெற்றுள்ளோம். குறிப்பாக 7 மணிநேர வேலை இன்று அமுலில் இருப்பது எங்கள் சாதனை. பெண் தொழிலாளருக்கு மூன்று மாதம் பிரஸவ லீவ் உண்டு!

மேலும் பேசுகையில், இந்தோனேஷிய தொழிலாள வர்க்கம் உலக சமாதானத்திற்கு அயராது உழைக்கின்றது என்று அவர் கூறினர்.

ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளிடையே இருக்கும் பரஸ்பர தகராறுகளை சமாதான முறையில் தீர்க்க இந்தோனேஷிய அயல் நாட்டு மந்திரி இரண்டாவது ஆசிய-ஆப்பிரிக்க நாடுகளின் தலைவர்கள் கூடிப்பேசவேண்டும் என்று கோரியுள்ளதை அவர் குறிப்பிட்டார். இம்மாதிரி பேச்சுவார்த்தைகள் மூலமாகவே எல்லா தகராறுகளும் தீர்க்கப் படவேண்டும் என்பதே தொழிலாள வர்க்கத்தின் கோரிக்கை என்று அவர் கூறினர்.

பிறகு தோழர் ஹரிஸானே

(4-ம் பக்கம் பார்க்க)

யப்பு நடை
மீது ஆக்ரமிட
மென்று பிரதம
மக்கள் சபையி
இந்த அறிவிப்பு
உண்டுபண்ணிய
பட்டவர்த்த
நேபாளம் சம்ப
வெளிவந்ததே
நேபாளம்
இவ்விதம் அ
நிலவு இருட
சபைக்கு ம
களிடம் பே
செய்தார்.

#### விவாதத்

சீன-இ
குறித்து
நடந்த விவாத
நேரு இன்று ம
பதிலளித்தார்.
யில், "சீன-இந்திய
சீர்குலையுமாளுல்,
லட்சோப லட்சம் ம
வாழ்க்கையை அடி
றிக்கொண்டு ஆயுத
வேண்டியதாக முடியும்,
போர்க்கோலம் பூண
வரும். அவ்வித நிலைமை
மென்பதில் சந்தேகத்திற்கு
தும் இடமில்லை. ஜீவமரண
ராட்டமாக விருக்குமென்பத
ஒவ்வொரு காரியமும் சிறு கா
யம் தொட்டு பெரும் திட்டம் வரையில் எல்லாமே போர் சம்பந்தப்பட்டதாக மாறிவிடும்.

இந்தியாவை அடக்கி ஆளக் கூடுமென்று சீனு நினைக்குமாளுல் அது மதியீனமே. அதேபோல் சீனுவை அடக்கி ஆளக்கூடுமென்று இந்தியா நினைப்பதும் மதியீனமே.

#### மக்கள் சபையின் கடமை

இந்த அறைகூவலைச் சமாளிக்க இன்றுள்ள இந்திய சர்க்காரே போதுமென்று இச்சபை முடிவு செய்யக்கூடும். அதிக திறமை

நா
திப்ப
அல்லது
வேண்டும்.
சீனுவைத்
டுக் கொடுக்
இந்தியா அனு
டுக்கட்டை
வதற்கு பேச்சுவ
ஏற்பது விட்டு
திருப்தி செய்யும்
ஆகாது.

(4-ம் பக்கம் பா



# நேபாளத்திற்கு சோவியத்

### 625 மைல் நீள சாலை அமைக்கப்

லண்டன், நவ. 26—

நேபாளத்தில் 625 மைல் நீள சாலை ஒன்று அமைக்கப் பூர்வாங்க வேலையை சோவியத் நிபுணர்கள் ஆரம்பித்துவிட்டதாக இன்று சோவியத் செய்தி ஸ்தாபனம் அறிவித்தது.

அந்த சாலை நேபாளத்தின் கிழக்கு, மேற்குப் பகுதிகளை இணைக்கும். தற்போது இந்திய பிரதேசத்தின் வழியாகத்தான் ஒரு பகுதியிலிருந்து மற்றொரு பகுதிக்குச் செல்லவேண்டும்.

கடந்த ஏப்ரல் மாதம் ஏற்பட்ட சோவியத்-நேபாள பொருளாதார, தொழில் நுட்ப உதவி ஒப்பந்தப்படியே சோவி

யத் நிபுணர்கள்
அனுப்பப்பட்டுள்
மின்சார நிலை
தொழிற்சாலை
கரிப்புத் தெ
அமைப்பதி
திற்கு சே
அளிக்கு
பேரில்
3 கே
க
ஒ
சே

# ...ராமங்களைப் ...ம் கொடுக்க முயற்சியா?

## ...வுக்கு விஷயம் தெரியாதாம்

..., நவ. 26—
... ஐந்து இந்
...பாகிஸ்தானி
...இந்திய சர்க்
...திருப்பதாகக்
...விவாதிக்கச்
...திரு. எஸ்.
...அவசரத் தீர்
...ந்தார்.
...ளிலும் 2000
...ம் அவர்களில்
...அகதிகளென்
...ள் சமீபத்தில்
...இந்திய பாகிஸ்
...டில் குறிப்பிடப்
...ம் அக்கிராமங்
...சர்க்காரின் சம்ம
...பார்லிமெண்டின்
...இல்லாமல் ரகசிய
...தானிடம் ஒப்படைக்
...றனவென்றும் இவ்வித
...ளக் குறிப்பிட்டு அக்கிரா
...ர் பிரதிநிதிகள் ஒரு தந்தி
...யிருப்பதாகவும் திரு.
... கூறினர்.

### ...ட்டுமந்திரி எதிர்ப்பு

... அவசரத் தீர்மானத்தை
...ட்டு மந்திரி எதிர்த்தார்.
...மிருந்தோ ஒரு தந்தி வந்த
...பது ஓர் அவசரத்தீர்மானத்
...துப்போதிய காரணமாகாது
...ரூர் உள்நாட்டுமந்திரி. இந்
... குறிப்பிட்ட விவகாரத்தைப்
...பொறுத்தவரையில் பாகிஸ்தானு
...டன் செய்துகொண்ட உடன்பாடு
நேர்மையான தென்றும் உடன்
...பாட்டின் பிரகாரமே நடவடிக்
...கை எடுக்கப்படுகிறதென்றும்
அவர் கூறினர்.

### ...பந்துக்கு சபாநாயகர் மறுப்பு

சபாநாயகர்: உள்நாட்டு மந்திரி கூறிய சமாதானம் எனக்குத் திருப்தி அளிக்கவில்லை. தந்தியில் குறிப்பிடப்பட்ட கிராமங்கள், உடன்பாட்டில் குறிப்பிடப்பட்டிருக்கின்றனவா? இது கடுமையான விஷயம். அவசரத் தீர்மானத்திற்கு ஏற்றதல்ல என்று உள்நாட்டு மந்திரி கூறுவதை நான் ஏற்கமுடியாது.

உள்நாட்டு மந்திரி: அந்தக் கிராமங்கள் உடன்பாட்டில் கூறப்பட்ட பிரதேசத்தில் உள்ளனவா அல்லவா என்பதை என்னுல் கூற இயலாது. கிராமங்களின் ஜாபிதா என்னிடத்தில் இல்லை.

திரு. தியாகி (காங்கிரஸ்): அந்த ஐந்து கிராமங்கள் பாகிஸ்தானிடம் ஒப்புவிக்கப்படுகின்றனவா என்பதை அறிய இச்சபை ஆவல் கொண்டிருக்கிறது.

### பிரதமருக்கும் தெரியாதாம்!

பிரதமர் நேரு கூறியதாவது, அந்தக் கிராமங்களைப்பற்றி எனக்கு ஒன்றுமே தெரியாது. உடன்பாட்டில் அந்தக் கிராமங்கள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன என்று நான் கருதவில்லை. நான் அஸ்ஸாம் சர்க்காரை விசாரித்து மேற்கொண்டு தகவல் சேகரிக்கிறேன்.

பிறகு சபாநாயகர் அவசர தீர்மானத்தை நாளைவரை ஒத்திப் போட்டார். (பி. டி. ஐ.)

## மூன்ருவது திட்டத்தின் கீழ் 18 புதிய மருத்துவக் கல்லூரிகள்

புதுடெல்லி, நவ. 26—
மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் பதினெட்டு புதிய மருத்துவக் கல்லூரிகள் தொடங்கப்படும் என்று தெரிகிறது. மத்திய சர்க்கார் சுகாதாரத் துறை அமைச்சராலயத்தின் சிபார்சுப்படி இவை நிறுவப்படும். பம்பாய், மத்தியப் பிரதேசம் இரண்டுக்கும் ஒவ்வொன்றுக்கும் மூன்று கல்லூரிகள்; பீஹார், மைசூர், உ. பி. ஒவ்வொன்றுக்கும் இரண்டு கல்லூரிகள்; ஆந்திரம், சென்னை, ஒரிஸா, பஞ்சாப், ராஜஸ்தான், திரிபுரா ராஜ்யங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு கல்லூரியும் நிறுவப்படும்.

## உப-தேர்தல் வெற்றி விழா

விருதுநகர், நவ. 24—
அருப்புக்கோட்டை உப-தேர்தலில் சர்வகட்சி ஆதரவில், அபேட்சகராகப் போட்டியிட்ட எஸ். சுந்தர பாரதி வெற்றிபெற்றது பற்றி, வெற்றிவிழா விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. 23-11-59 அன்று ஆண்களும் பெண்களும், கிராமிய நடனங்களுடன் ஊர்வலமாக வந்தனர். மாலையில் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

...ால்
... ஆக்கிரமிப்பு ம...
...கொண்ட ஒரு தேசம்.
...ப்பூர்வமாக தோல்வி
...ட்ட கொள்கை மூலம்
...ரச்சினையைச் சமாளிக்க
...து. நாட்டின் பகுதிகளை
...கௌரவத்தையும் பாது
...தைவிட நடுநிலைமைக்
...கை முக்கியமானதல்ல.
...து நாட்டைப் பாதுகாப்ப
...கான தளவாடங்கள் குறை
...னது என்பது ருசுப்படுத்தப்
...ட்ட ஒன்ருகும். ஏனென்ருல்
...ற்கனவே நம்தேசம் ஆக்கிரமிப்
...க்குள்ளாகியுள்ளது.
...னவே, உள்நாட்டில் யுத்த தள
...ங்கள் குறைவாக இருப்பதன்
...ணமாக வெளிநாட்டு உதவியை
... நாட வேண்டும். இதுதான்
...பக்தி உள்ளவர்களின்
...மையாகும்.
...சீக்கிரம் இதைச் செய்ய
...டும். இந்தியாவின் ராணுவ
...சீனத்தின்ராணுவ பலத்தை
...து என்று புத்தியுள்ள
...ரும் சொல்ல மாட்டார்கள்.

...னமான நடை
...ரண்பாடானது,
...யூனிஸ எண்ணங்
...சிறந்த உதாரண
...விரோதியை நீ முறி
...னில் அவனை முத
...ந்துக்கொள்ள
... ஒரு பழமொழி
...ரீகிங்கின்
...அச்சா... நெறி
...ன் இந்தியா
...வர் என்று
...ப்படையா
...ரஸ் கட்சி
...காணங்
...வும் அதி
...ல் அவர் மிகவும்
...பெற்றிருப்பது
...கிறது. அல்லா
...ர்மேல் மக்களுக்
... கரைபுரண்டோ
...தெரிகிறது. இவை
...ணவெனில்மகாத்மா
...தலைசிறந்த அரசி
...ட்டுதல்மூலம் வளர்ந்த
... கட்சிக்குக் கிடைத்த
...ஜன ஆதரவின் மூலம்
...ர்தைக்கு ஏற்பட்டுள்ள
...ரித் தோற்றங்கள். மகாத்மா
...ந்தியின் வாரிசுகளாக வந்து
அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றி மகாத்மாகாந்தியின் சிறந்த பாரம்பரியத்தைச் சிதறடித்து விட்டார்கள். இவர்கள் எதுவுமே உருப்படியாக அந்தத் துறையில் செய்யவில்லை.

இந்த ஸ்தாபனத்திற்கு காந்தி சேகரித்து வைத்துவிட்டுப்போன நல்

...ருசுவி
...துதிகளிலி
...ள் வர்பஸ்
...ம் என்றும்,

# ஆசிரியருக்குக் கடிதங்கள்

## சுவாமியாரின் அடாத செயல்

ஐயா,

22-11-59ந் தேதி ஞாயிறு காலை வழக்கம் போல் திண்டுக்கல் புனித சூசையப்பர் ஆலயத்தின் பூசைக்கு நகர கிறிஸ்துவ மக்கள் சென்று கொண்டிருந்தார்கள். அது சமயம் 18-வது வார்டு கவுன்சிலரான நான் வழக்கம் போல் பூசையை முடித்துக் கொண்டு பிச்சையா என்ற தொழிலாளியின் குழந்தைக்கு பெயர் வைப்பதற்காக (ஞானஸ்நானம்) சென்ற சமயம் உதவிப்பங்கு சுவாமியார் சூசை மாணிக்கம் என்னைப் பார்த்து, "போடா வெளியே, நீ கோவிலுக்கு வரக்கூடாது, நாஸ்திகப் பயலே கோவிலில் நுழையக் கூடாது" என்று நிதானமிழந்து அலறினர். கூடியிருந்த கிறிஸ்துவர்கள் மத்தியில் பெரும் அதிர்ச்சியை ஏற்படுத்தியது. நான் நிதானமிழக்காது, சுவாமி! அவ்விதம் சொல்லுவது சரியல்ல. ஏன் வரக்கூடாது என்று சொல்லுகிறீர்? செய்த தவறு என்ன? குருவானவராகிய தாங்கள், அன்பின் வழிவந்த தாங்கள் இவ்விதம் பேசுவது சரியல்ல" என்று கேட்டேன்.

"ஒரு கன்னத்தில் அடித்தால் மறு கன்னத்தையும் திருப்பிக் கொடு" என்று ஏசுவின் ஞான உபதேசத்தைக் கூறும் குருவானவர் தன் அறைக்குள்ளே ஓடினர். தான் செய்த ஆங்காரம் என்ற பாபத்திற்குத்தான் பாப மன்னிப்புக் கோர சென்ருரோ என்று கூடி இருந்தவர்கள் நினைத்தார்கள். ஆனல் குருவானவரோ தடியைத் தூக்கிக் கொண்டு, வெளியே வந்தார். வந்தவர் என்னைப் பார்த்து 'வெளியே போடா, நாஸ்திகப் பயலே' என்று தடியை ஓங்கினர்.

கூடியிருந்த கிறிஸ்துவர்கள் ஆண்கள், பெண்கள் அத்தனை பேரும் சுவாமியார் தெரியாமல் நடந்து விட்டார். நீங்கள் சும்மா விட்டுவிடுங்கள் என்று கேட்டுக் கொண்டபடி நான் குழந்தைக்கு பெயரிடும்படி மீண்டும் வற்புறுத்தினேன். ஆத்திரம் கொண்ட சுவாமியார் அலறிப் புடைத்து ஓடினர்—சாந்தி பெற—போலீஸ் ஸ்டேஷனுக்கு. போலீஸ் சப் இன்ஸ்பெக்டர் அவர்கள் எங்கள் இருவரையும் விசாரித்துவிட்டு கடைசியாகக் கூறினர்: போப் பாண்டவரின் அறிக்கையின்படி நீர் கோவிலுக்கு வரக்கூடாது என்றுகூறுவதாகக்கூறினர். மதத்தின் கோட்பாடுகளுக்கு புறம்பாக இருப்பவனுக்குத்தான் மதப் பிரஷ்டமே அல்லாது காங்கிரஸாகவோ, கம்யூனிஸ்டாகவோ, தி. மு. க.வாகவோ இருப்பதால் தனி மனிதனின் மதச்சுதந்திரத்தைப் பறிக்க யாருக்கும் உரிமை இல்லை என்று எடுத்துக் கூறினேன். அதன்பின் சப் இன்ஸ்பெக்டர் விசாரிக்க, பொதுமக்கள் உண்மையைக் கூற சாமியார் தாம் தடியை ஓங்கியதாக ஒப்புக் கொண்டார். மத போதகர் அரசியல் கட்சி பாரபட்சம் பாராட்டுவதன் விளைவே இது.

எம். எஸ். ஜெர்மனி.
திண்டுக்கல்

●

## பஞ்சாயத்தின் பொது மராமத்து வேலைகள்

ஐயா,

கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள 46 பஞ்சாயத்துகளுக்குரிய தேர்தல் காலாவதிகளோ, காலவரையறையின்றி மாறிக் கொண்டேயிருக்கின்றன. இவ்வருட இறுதிக்குள் தேர்தல் நடத்தப்படும் என்று அரசாங்கம் உறுதி கூறியிருக்கிறதேயாயினும் நடந்து முடிந்தால்தான் வெளிச்சம். பஞ்சாயத்துகளின் பொதுமராமத்து வேலைகளுக்காக பஞ்சாயத் ஒவ்வொன்றிற்கும் ரூ. 5,500 தனி மான்யம் வழங்கி வருடங்கள் கழிந்தும் இந்த மான்யங்களுக்காக பஞ்சாயத்தில் தீர்மானித்துள்ள வேலைகளுக்கு எஸ்டிமேட் எடுத்து அதற்கான சட்டப்படியான எல்லா அனுமதிகளும் கிடைத்து வேலையை செய்வதற்கான டெண்டர் போட்டு அதன் படி பல காண்டிருக்டர்கள் டெண்டர் பிடித்து வேலை செய்வதற்கு தயாராகவுமிருக்கிருர்கள். ஆனல் அதற்கு மேல் எவ்வித நடவடிக்கைகளுமில்லாமலிருப்பதோடு வேலைகள் நடைபெறும் என்றுள்ள நம்பிக்கையுமில்லை. இந்த நிலைமை தொடர்ந்து டிசம்பர் மாதமும் முடிவடைந்து விட்டால் தனி மான்யமாக வழங்கப்பட்ட 5,500 ரூபாய்கள் எல்லா பஞ்சாயத்துகளும் நஷ்டமடைவதோடுபஞ்சாயத்தாரின் திறமைக் குறைவு என்ற குற்றம் சுமத்துவதற்கும் அரசாங்கம் தயங்கப் போவதில்லை. இதோடு இன்ெருரு புதிய நிலைமையையும் அரசாங்கம் பஞ்சாயத்தார் மீது திணித்துள்ளது. இது வரையில் பஞ்சாயத்தாரால் கிராமத் தெருக்களில் பொருத்தப்பட்டுள்ள பஞ்சாயத் (25 வால்ட் பல்புகளுடைய) தெரு விளக்குகளுக்கு மாதம் ஒன்றிற்கு ரூபாய் ஒன்றே மின்சார கட்டணமாக அடைத்து வந்தோம். ஆனல் மின்சார இலாகாவின் புதிய கொள்கைப்படி 40 வால்ட் பல்புகளையே தெருவிளக்குகளுக்கு உபயோகிக்க வேண்டும். அதற்கு மாதமொன்றிற்கு 2 ரூபாய் கட்டணம் செலுத்தவேண்டும் என்று தெரிவித்துள்ளார்கள். இதனல் என்ன ஏற்படப்போகிறதென்ருல் பஞ்சாயத்தின் நிதி நிலைமை பற்ருக் குறையாகிறது. அதனல் மக்கள் மீது அதிக வரியை நிர்ப்பந்தமாக சுமத்தப்பட வேண்டுமென்பது தானே கொள்கையாகவிருக்க முடியும். இந்தசீர்கேடானகொள்கையை கைவிட வேண்டுமென்று வற்புறுத்துவது நமது கடமையாகும். இன்றயநிலைமையில் சென்னை அரசாங்கம் முன்னதாகவே பஞ்சாயத்துகளுக்கு அறிவித்துள்ளபடி பஞ்சாயத்தின் வருட வருமானத்தில் பதினைந்து சதமானங்களுக்கு மேல் மின்சார தெரு விளக்கு செலவு செய்யக்கூடாது என்ற காரணத்தால் பல பஞ்சாயத்தில் பூரணமாகதெருவிளக்குகளமைக்க முடியாமலிருக்கிறது. இரண்டு மடங்கு மின்சாரக் கட்டணம் கொடுக்க வேண்டுமென்ற நிர்ப்பந்த நிலைமை ஏற்பட்டால் எரிகிற மின்சார தெரு விளக்குகளையும் எடுத்துவிட வேண்டியதுதானே வரும் என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். சென்னை அரசாங்கம் பஞ்சாயத்துகளுக்கு அதிக அதிகாரம் கொடுக்கப் போகிறது என்று கூறும் கூற்றை நினைத்தால் அதிகாரம் மக்களை துன்பத்திற்குள்ளாக்குவதாகவேயிருக்கும் என்றுதானே எண்ணவேண்டியதாக விருக்கிறது. எனவே உடனடியாக இந்த அவல நிலைமைகளை மாற்றி மக்களுக்குப் பயன்படும்படியான நிலைமையை அமைக்க அரசாங்கமும் மக்களும் முன்வர வேண்டுகிறேன்.

எல். வேலாயுதம்,
தாமரைக்குளம்,

# ...ன் 'யுத்தம்' என்பவர் பலஹீனமாக்குகின்றனர்

## ... இந்திராகாந்தி கண்டனம்

...மசூர், நவ. 26—
...வர் திருமதி
...இங்கு பேசும்
...அரசாங்கத்தின்
...கொள்கையை
...யா சுதந்திரம்
... இதுவரை
...ிய நாட்டுக்
...தமான
... என்ருர்
...கையில்,
...ட்டுக்
...லும்
...ம்
...ல்

...யைக் கடைப்பிடிக்கிருேம். ஆனல், எல்லைகள் இருக்கும் இந்த நிர்மானுஷ்ய இடத்தைப் பற்றி யாதொரு அனுபவமும் இல்லாதவர்களும், யுத்தம் என்ருல் என்ன என்ற அனுபவமே இல்லாதவர்களும், சீனுவுக்கெதிராக யுத்தம் தொடுக்கப்பட வேண்டும் என்று துடிக்கிருர்கள், நம்மை வற்புறுத்துகிருர்கள்.

இவ்விதம் இவர்கள் பேசுவதன் மூலம் இந்தியாவை பலவீனப் படுத்துகின்றனர் என்ருர்.

நாட்டின் நிர்மாணத் திட்டங்களை நிறைவேற்றுவதிலும், அதன் மூலம் தேசத்தில் பொருளாதார சுபீட்சத்தை ஏற்படுத்து...திலும் மக்கள் ஒன்றுபட்டு ...ழைக்க வேண்டுமென்று நாட்டு ...ங்களைக் கேட்டுக் கொண்டார்.

சென்ற 7-ந்தேதி டில்லி ராஷ்ட்ரபதி தியேட்டரில் 'கவி காளிதாஸ்' படம் பார்த்து, தயாரிப்பாளர் ஜோதிஷ் திருவேதியை நேரு பாராட்டும் காட்சி.

## கவி காளிதாஸுக்கு நேரு பாராட்டு

மகா காவியங்களான 'சாகுந்தலம்', 'மேகதூதுவன்' ஆகியவற்றின் சிருஷ்டிகர்த்தா கவி காளிதாஸ். அவரது கதையை சிந்து பிலிம்ஸார் திரைப்படமாக்கியிருக்கின்றனர்.

பிரதம மந்திரி பண்டித நேருவும் மற்றும் பல ராஜ்ய மந்திரிகளும் இப்படத்தைப் பார்த்துப் பாராட்டி நற்சாட்சிப் பத்திரங்களும் வழங்கியிருக்கின்றனர்.

நிருபராய், அனிதா குகா, பாரத் பூஷண், சாரதா சட்டர்ஜி முதலியவர்கள் நடித்துள்ள இப்படத்தில் இடையிடையே ஈஸ்ட்மென் கலரிலும் பல காட்சிகள் உள்ளன.

## மிஸ்டர் இந்தியா

நகைச்சுவை நடிகர் ஐ. எஸ். ஜோகர் எழுதிய 'மிஸ்டர் இந்தியா' என்ற கதையை சிப்பி பிலிம்ஸார் தயாரித்துள்ளனர். இதில் கீதாபலியுடன் ஜோகர் பிரதம பாகத்தில் நடித்துள்ளார். மற்றும் கமல்ஜித், ஹெலன் முதலியவர்களும் இதில் நடித்துள்ளனர்.

# திரை உலகம்

பட விமர்சனம்

## யானை வளர்த்த வானம்பாடி

தயாரிப்பு: நீலா புரொடக்ஷன்ஸ் :: டைரக்ஷன் சுப்ரமண்யம்

ஆங்கில வனப் படங்கள் மோஸ்தரில் எடுக்கப்பட்டுள்ளது 'யானை வளர்த்த வானம்பாடி. ஆனால் கதையில் கட்டுக் கோப்பும் கோர்வையும் போதாது.

குமாரி அசல் காட்டு மல்லியாக காட்சியளிக்கிறார். 'டார்ஜானை'ப் போல மரத்துக்கு மரம் தாவுகிறார்.

வனப்படம் என்பதாலோ என்னவோ ஸ்ரீராமும் நம்பியாரும் நடிப்புக்கு அதிக இடம் கொடுக்கவில்லை!

எனினும் இவற்றிற்கெல்லாம் வட்டியும் முதலுமாகச் சேர்த்து பெட்ரோ குரங்கும், பீமன் யானையும் சக்கை போடு போடுகின்றன. அதிலும் 'பெட்ரோ' ஆடி-ஓடி, குதித்து கூத்தாடி, அழுது சிரித்து, வித விதமான சேஷ்டைகள் செய்து, நம் உள்ளங்களை எளிதாக கவர்ந்துவிடுகிறது. பீமன் யானை குழந்தை மல்லியை தாலாட்டும் இடம் அற்புதம்!

படத்திற்கே வாயில்லா இந்த இரண்டு பிராணிகளும் உயிரூட்டுகின்றன.

டைரக்ஷன் பரவாயில்லை. பாலர் பாட புத்தகத்தையும், பின்னர் படிப்படியாக ஒவ்வொரு வகுப்புப் புத்தகத்தையும் பிறகு துப்பறியும் புத்தகங்களையும் காட்டி சேகர் வளர்வதையும் அதேசமயம் அவனது குணப்பண்பை சித்தரிப்பதும் நன்றாய் இருக்கிறது. ஆனால் தர்மராஜன் குடிசைக்கருகில் விமானம் நொறுங்கி விழுந்திருக்கும் போது அது அவருக்குத் தெரியாமல் போனது ஆச்சரியமே.

படத்தில் பெரும்பகுதி வெளிப்புறக் காட்சிகளே. அழகு கேரளத்தின் இயற்கைக் காட்சிகள் கண்களைக் குளிர வைக்கின்றன. 'கண்ணே வண்ணப் பசுங்கிளியே' என்னும் பாட்டு இனிமையாக உள்ளது.

மொத்தத்தில் படம் சலிப்புத் தட்டாமல் பொழுது போகும்.

## தில் பி தேரா-ஹம் பி தேரே

கன்வார் கலா மந்திர் தயாரித்து வரும் 'தில் பி தேரா-ஹம் பி தேரே' (என் இதயமும் உனக்கு-நானும் உனக்குத்தான்) என்ற படத்தில் பிலிம் பேர் (Film Fare) பரிசுபெற்ற தமேந்தர் கதாநாயகனாகவும், கும் கும் கதாநாயகியாகவும் நடித்து வருகின்றனர். மற்றும் பால்ராஜ் ஸஹானி, உஷாகிரோன், ஹரிசிங் தாஷானி சுசி, மோஹன் சோட்டி முதலியோரும் இப்படத்தில் நடிக்கின்றனர். இப்படத்தை ஏ. ஹிவ்கோ டைரக்ட் செய்து வருகிறார்.

## பொன் விளையும் பூமி

எஸ். கே. பிக்சர்ஸ் அளிக்கும் ஓரியண்டல் மூவீஸாரின் 'பொன் விளையும் பூமி' டிசம்பர் 4-ந் தேதி திரையிடப்பட விருக்கிறது. இப்படத்தில் ஜெமினி கணேசன் இதுவரை நடித்திராத புதுமையான பாத்திரத்தில் நடித்துள்ளார். அவரது ஜோடியாக பத்மினியும் மற்றும் பாலையா, சந்திரபாபு, ராகினி முதலியவர்களும் நடித்துள்ளனர்.

'தில் பி தேரே ஹம்பி தேரே' படத்தில்—பால்ராஜ் ஸஹானியும், உஷாகிரோனும்.

## ஏழரைக் கோடி ரூபாய் செலவில் தயாராகிறது பென்-ஹர்!

### எம். ஜி. எம்.மின் அற்புதப் படம்

பிரசித்திபெற்ற அமெரிக்கப் படத் தயாரிப்பாளர்களான மெட்ரோகோல்ட்வின் மேயர் கம்பெனியார் 'பென்-ஹர்' என்னும் பிரம்மாண்டமான படத்தைத் தயாரித்து வருகின்றனர். இதுவரை எந்தப் படத்திற்கும் செலவழித்திராத முறையில் ஏழரைக் கோடி ரூபாய்க்கு அதிகமாக இந்தப் படத்திற்கு செலவழிக்கப் பட்டுள்ளது. பல்லாயிரக் கணக்கான பேர் நடிக்கும் இப்படம் திரை உலக சரித்திரத்திலேயே ஒரு புதிய திருப்பத்தை ஏற்படுத்தும் என்று சொல்லப்படுகிறது. அந்த அளவுக்கு கண்டோர் மெய்மறந்து, வியந்து, உடல் சிலிர்க்கும் அளவுக்கு அற்புதமாக இந்தப் படம் தயாரிக்கப்படுகிறதாம்.

இந்தப் படத்தில் கதாநாயகி எஸ்தராக நடிப்பதற்கு உலகமெல்லாம் தேடி கடைசியில் இஸ்ரேல் நாட்டு அழகியான ஹியா ஹேர்யா ரிட் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். இந்தப் படத்தில் அவரது அற்புதமான நடிப்பின் மூலம் உலகின் தலைசிறந்த சினிமா நட்சத்திரங்களில் ஒருவராக ஆகிவிடுவார் என்று கூறப்படுகிறது.

புகழ்பெற்ற பல படங்களை டைரக்ட் செய்த வில்லியம் வைலர் இப்படத்தை டைரக்ட் செய்கிறார்.

இப்படம் நியூயார்க்கில் டிசம்பரிலும் 1960 ஜனவரிக்குப் பிறகு உலகெங்கிலும் திரையிடப்பட இருக்கிறது.

## நகர சினிமாக்கள்

## ஐ வாஸ் மாண்டிஸ் டபிள்

### (I was Monty's Double)

இரண்டாவது மகாயுத்தத்தின் போது உண்மையாக நடந்த கதை இது. ஒரு மாஜி நடிகர் பிரிட்டிஷ் ராணுவத்தில் பணியாற்றுகிறார். லண்டனில் ராணுவத்தினர் நடிக்கும் நாடகமொன்றில் ஜெனரலாக வேஷமிட்டு அவர் நடிக்கிறார். அவரது வேஷம் பிரிட்டிஷ் தளபதியான மாண்ட்கோமரி போல் இருக்கிறது. இதைப் பார்த்த இரண்டு பிரிட்டிஷ் ராணுவ அதிகாரிகளுக்கு ஒரு எண்ணம் உருவாகிறது. அதாவது அவரை மாண்ட்கோமரி போல காண்பித்து நாஜிகளை ஏமாற்றி சில முக்கிய சாதனைகளைச் செய்யத் திட்டமிடுகின்றனர். மயிர் கூச்செறியும் பல திடுக்கிடும் சம்பவங்களுக்கும் கஷ்டங்களுக்குமிடையே அவர்களது திட்டம் வெற்றிகரமாக நிறைவேறுகிறது. இந்த உண்மை கதை வியக்கத்தக்க முறையில் படமாக்கப்பட்டுள்ளது. அதிலும் விசேஷம் என்னவென்றால் இந்த உண்மை சம்பவத்தில் போலி மாண்ட்கோமரியாக இருந்த கிளிப்டன் ஜேம்ஸே இதிலும் போலி மாண்ட்கோமரியாக நடிக்கிறார். மற்றும் ஜான் மில்ஸ், சிசில் பார்க்கர் முதலியோரும் நடிக்கின்றனர். இப்படம் வெள்ளி முதல் நியூ எல்பின்ஸ்டனில் காட்டப்பட்டு வருகிறது.

## ஹண்டர் இன் தி சன்

பாஸ்கு என்னும் இன மக்கள் தங்கள் சொந்த மண்ணைவிட்டு கலிபோர்னியாவில் சென்று குடியேறுவதைப் பற்றியதுதான் இக்கதை. இந்த பாஸ்கு கூட்டத்தில் ஒரே ஒரு அமெரிக்கராக நடிக்கிறார் ஜெப் சேண்ட்லர். ஒரு பாஸ்கு அழகி (சூஸான் ஹேவர்ட்) மீது ஜெப்சேண்ட்லரும் ஜேக்யூ பெர்கரேடும் காதல் கொள்ள, அந்தப் போட்டியிலிருந்து பல சிக்கல்களும் கஷ்டங்களும் ஏற்படுகின்றன. இதை வைத்துப் பின்னிச் செல்கிறது படம். இப்படம் வெள்ளி முதல் ஓடியனில் திரையிடப்பட்டுள்ளது.

## தில் தேக்கே தேக்கோ

இப்படம் வட இந்தியாவில் வெற்றியடைந்த படம். ஷம்மிகபூருக்கு முழு சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டு இப்படத்தில் முதல்முறையாக பிரகாசிக்கிறார். ஆஷா பரீக் என்னும் புது இளம் நடிகை ஜமாய்த்துத் தள்ளுகிறாள். துஷ்டன் ஒருவனது சதியால் ஒரு பணக்காரப் பெண் தனது கணவனிடமிருந்தும் மகனிடமிருந்தும் பிரிகிறாள். இவர்களுடே ஒரு இளம்பெண் குறுக்கிட்டு, பணக்காரியின் மகனை காதலித்து, பின்னர் பிரிந்தவர்களை ஒன்று சேர்த்து வைக்கிறாள். இதுதான் கதை. இக்கதை விறுவிறுப்பான முறையில் படமாக்கப்பட்டுள்ளது.

## பத்மினி-ராகினி உஸ்பெக் நடனம் ஆடுவர்

### சந்திரபாபு நகைச்சுவை விருந்தளிப்பார்

### சென்னையில் ஏழை நோயாளி குழந்தைகளுக்கு உதவி கலா நிகழ்ச்சிகள்

சென்னை லயன்ஸ் கிளப்பார் ஏழை நோயாளிக் குழந்தைகளுக்கு வைத்திய வசதிகள் செய்து தருவதற்கென்று வருகிற 28-ம் தேதி இரவு 7 மணிக்கு எஸ். ஐ. இ. டி. கல்லூரியில் சில கலா நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்துள்ளனர்.

இந்தக் கலா நிகழ்ச்சியில் பிரபல திரைப்பட நட்சத்திரங்களான பத்மினியும் ராகினியும் கலந்து கொண்டு இதுவரை கண்டிராத புதுவித நடனங்களை ஆடிக் காண்பிப்பார்கள். இவற்றிலே உஸ்பெக் நடனமும் ஒன்று. இவர்களிருவரும் சில காலத்திற்கு முன்பு சோவியத் யூனியன் சென்றிருந்த போது இந்த உஸ்பெக் நடனத்தைக் கற்றுக் கொண்டனர்.

புகழ்பெற்ற நகைச்சுவை நடிகரான சந்திரபாபுவும் ஆடிப்பாடி ரசிகர்களை மகிழ்விப்பார்.

இது தவிர புரொபசர் சேகர் மந்திர வேலைகள் செய்து காண்பிப்பதோடு ஹரிகர சுப்பிரமணியம் சிரிப்பு விருந்தளிப்பார்.

இந்த நிகழ்ச்சிகளுக்குக் கட்டணம் ரூ. 50, 10, 5. இந்த அற்புத கலாநிகழ்ச்சிகளுக்கு ஆயிரக் கணக்கில் வருகை தந்து, நற்பணிக்கு உதவுமாறு பொது மக்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள்.

## பைத்தியங்கள் பல விதம்

"கவிதா ராஜ்யம்" நடத்திப் புகழ்பெற்ற எம்.எஸ். திரௌபதி டிசம்பர் மாதத்தில் 'பைத்தியங்கள் பல விதம்' என்ற புதிய நாடகமொன்றை அரங்கேற்றப் போகிறார். இதுவரை வெளிவராத புத்தம் புது போக்குக் கொண்ட இந்நாடகத்தில் இசையும், நடனமும், நகைச்சுவையும் சிறப்பான முறையில் அமையப் பெற்றிருக்கின்றனவாம். ஹூலா ஹூப் என்ற மேல்நாட்டு நடனமும் இதில் இடம் பெற்றிருக்கிறதாம். இந்நாடகத்தை தமிழ்வாணன் அமைத்துள்ளார். கடைசி காட்சி வரையில் இருந்து வருகிற மர்மம், கடைசிக் காட்சியில் கடைசி விநாடியில்தான் வெளியாகிறதாம். இந்நாடகத்தில் எம். எஸ். திரௌபதி தாய்மை வேடம் தாங்கி நடிக்கிறாராம்.

## ஜெர்மன் ஜனநாயக குடியரசின் திரைப்பட விழா சென்னையில் நடைபெறும்

ஜெர்மன் ஜனநாயகக் குடியரசின் திரைப்பட விழா சென்னையில் நடக்கவிருக்கிறது. இந்த விழா டிசம்பர் 4-ம் தேதி முதல் 10-ம் தேதி வரை 7 நாட்கள் நடைபெறும். இந்தப் படங்கள் சென்னை 'மிட்லண்ட்' தியேட்டரில் காட்டப்படும். பம்பாயிலுள்ள அகாடமி சினிமா என்ற கம்பெனியார் இப்படங்களின் விநியோகப்பொறுப்பை ஏற்றுள்ளனர்.

பம்பாயிலும், புதுடில்லியிலும் நடைபெற்ற விழாக்களில் இப்படங்கள் காட்டப்பட்டன. 'என்னுடைய டிராடுலை மறக்காதே' என்ற படம் இளைஞர்களின் வாழ்க்கையைப் பின்னணியாகக்கொண்டது. 'மெஹூலன் பர்க்போப்' என்ற படம் ஆக்பா கலரில் தயார் செய்யப்பட்டது. மத்திய கால நிலைமைகளைப் பின்னணியாகக் கொண்டது.

'நட்சத்திரங்கள்' என்ற படம் ஐரோப்பாவில் மிகவும் பிரசித்தமான படம் காதலைப் பின்னணியாகக் கொண்ட இப் படம் ஐரோப்பாவில் பல பரிசுகளைப் பெற்றுள்ளது.

## எம். ஜி. ராமச்சந்திரன் படப்பிடிப்பில் கலந்து கொண்டார்

சில மாதங்களாக விபத்துக்காளாகி ஓய்வு பெற்றிருந்த எம். ஜி. ராமச்சந்திரன் சென்ற வாரம் முதன் முதலாக கல்பனா கலா மந்திர் தயாரிக்கும் 'தாய் மகளுக்கு கட்டிய தாலி'யின் படப்பிடிப்பில்கலந்துகொண்டார் சில தினங்கள் படப் பிடிப்பு வேலைகளே பாக்கியுள்ள இப்படம் டிசம்பர் இறுதி வாரத்தில் நிச்சயமாகத் திரையிடப்படுமென்று தெரிகிறது.

இதில் எம். ஜி. ராமச்சந்திரனுடன் ஜமுனா, தங்கவேலு, ராஜசுலோசனா, கண்ணம்பா, சக்கரபாணி, ஓ. ஏ. கே. தேவர் முதலியவர்கள் நடித்து வருகின்றனர் சி. என். அண்ணாதுரை எழுதிய கதைக்கு அரங்கண்ணல் வசனம் அமைத்துள்ளார்.

## ஜெமினி கணேசன் மார்பில் கத்தி பாய்ந்தது

நடிகர் ஜெமினி கணேசன் மார்பில் கத்தி பாய்ந்து படுகாயம் ஏற்பட்டது. 26ந் தேதி மாலை நெப்டியூன் ஸ்டுடியோவில் ஜுபிடர் பிக்சர்ஸாரின் 'எல்லோரும் இந்நாட்டு மன்னர்கள்' படப்பிடிப்பு நடந்தபோதே எதிர்பாராதவிதமாக இச்சம்பவம் நடைபெற்றது.

கத்திச் சண்டை காட்சியொன்று அன்று படமாக்கப்பட்டது. அதில் டி. ஆர். ராமச்சந்திரன், ஏ. கருணாநிதி ஆகியோருடன் ஜெமினி கணேசன் கத்திச் சண்டை செய்தார். அப்போது கத்தி அவரது மார்பில் பாய்ந்துவிட்டது. உடனே அவரை காரில் வைத்து ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்றனர்.

ஏ. வி. எம். ஸ்டுடியோவில் கல்பனா கலாமந்திரின் 'தாய் மகளுக்குக் கட்டிய தாலி' படப்பிடிப்பின் போது ஏ.வி.மெய்யப்பன், எம்.ஜி.ஆர். தங்கவேலு, தயாரிப்பாளர் ஆர்.ஆர். சந்திரன் ஆகியோர்.

எஸ். கே. பிக்சர்ஸ் அளிக்கும் ஓரியண்டல் மூவீஸின் 'பொன் விளையும் பூமி'யில்—ஜெமினி கணேசன், பத்மினி.

## என்னை நம்பியிருப்பவர்களை நான் என்றும் கைவிடமாட்டேன்

### எம். ஜி. ராமச்சந்திரன் உறுதி

"என்னை நம்பி வாழ்கிறவர்களை நான் கைவிடமாட்டேன்" என்று உறுதி கூறினார் எம். ஜி. ராமச்சந்திரன்.

எம். ஜி. ராமச்சந்திரன் விபத்தின் காரணமாக சில மாதங்கள் வெளி அலுவல்களில் ஈடுபடாதிருந்தது அனைவருக்கும் தெரிந்ததே. பூரணகுணமடைந்த அவர் சென்ற வாரம் படப்பிடிப்பில் கலந்து கொண்டார். இதையொட்டி சென்ற ஞாயிற்றுக் கிழமை பரங்கி மலை அருகில் உள்ள ராமாவரம் எம். ஜி. ஆர். தோட்டத்தில் பத்திரிக்கையாளர்களுக்கு ஒரு விருந்து நடத்தினார்.

எம்ஜியார் பிக்சர்ஸ் சார்பாக ஆர். எம். வீரப்பன் அனைவரையும் வரவேற்றார். 'ஐந்து மாதங்களுக்கு மேலாக எவ்விதமான வேலையிலும் ஈடுபடாததால் எம். ஜி. ஆர், அவர்களுக்கு எவ்வித வருவாயும் இல்லாதிருந்தும், அவரை நம்பி வாழும் சுமார் 200க்கும் மேற்பட்டவர்களுக்கு எவ்வித குறையும் அவர் வைக்கவில்லை. அவருக்கு ஏற்படும் விபத்து அவரை அதிகமாக பாதிக்காவிட்டாலும் அவரை நம்பி வாழ்பவர்களைத்தான் பாதிக்கும். ஆனால் தான் பாதித்தாலும் தன்னை சார்ந்தவர்களை பாதிக்கவிடாமல் பாதுகாத்தது அவரது பெருந்தன்மையான குணத்திற்கு ஒரு எடுத்துக்காட்டாகும்" என்று அவர் பேசும் போது குறிப்பிட்டார்:

அதன் பின்னர் எம். ஜி. ராமச்சந்திரன் பேசுகையிலேயே என்னை நம்பியிருப்பவர்களை நான் உறுதியாக என்றும் கைவிடமாட்டேன்' என்று அறிவித்தார்.

'கலைஞர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கவேண்டியது அவசியம். அப்போதுதான் கலைஞர்களைப்பற்றிய தெளிவான கருத்துக்களை பத்திரிகையாளர்கள் உணர முடியும். ஆகவே மாதம் ஒரு முறை இம்மாதிரி பத்திரிகையாளர்களை கூட்டி விவாதிப்பதென நான் முடிவு செய்திருக்கிறேன். இதைப்போல மற்ற கலைஞர்களும் முன்வந்தால் மக்கள் மத்தியில் கலைஞர்களைபற்றி தவறான கருத்துக்கள் பரவவிடாமல் தடுக்கமுடியும், என்று அவர் மேலும் குறிப்பிட்டார்.

## ராஜபக்தியில் ஈ. வி. சரோஜா

சாகசங்கள் புரிந்து மகாராணியை மயக்கும் மெல்லியல் கோதையாக ஈ. வி. சரோஜா, பி. ராஜமாணிக்கம் தயாரித்து வரும் 'ராஜ பக்தி'யில் நடித்து வருகிறார்.

சிவாஜி கணேசன், பாலையா, நம்பியார், ஸ்டண்ட் சோமு, பத்மினி, பானுமதி, வைஜயந்திமாலா, பண்டரிபாய், மாஸ்டர் முரளி முதலிய நட்சத்திர நடிகர்கள் நடித்துவரும் இப்படத்தை கே. வேம்பு டைரக்ட் செய்கிறார். மூலக்கதையை வி. வி, கோபாலரத்தினமும், திரைக் கதை வசனத்தை கு. ராஜவேலுவும் அமைத்துள்ளனர்.

## எங்கள் குலதேவி

மாடர்ன் தியேட்டர்ஸார் தயாரித்துள்ள 'எங்கள் குல தேவி' டிசம்பர் 4-ந் தேதியன்று வெளிவரப் போகிறது.

## அழகர்மலைக் கள்ளன்

கெம்பராஜ் தயாரித்துள்ள 'அழகர் மலைக் கள்ளன்' தணிக்கையாகி விட்டது. இப்படம் டிசம்பர் இரண்டாவது வாரம் திரையிடப்படுமென்று தெரிகிறது.

## கலைமணி புரொடக்ஷன்ஸ்

பிரபல மேக்அப் மேன் நவநீதம் சொந்தமாக ஒரு படம் தயாரிக்க ஏற்பாடு செய்துள்ளார். கலைமணி புரொடக்ஷன்ஸ் என்ற பெயரில் ஒரு கம்பெனியை ஏற்படுத்தியிருக்கும் அவர், தான் தயாரிக்கப்போகும் படத்தில் நடிக்க ஜெமினிகணேசன், சாவித்திரி, தங்கவேலு முதலியவர்களை ஒப்பந்தம் செய்திருக்கிறார். இப்படத்தை வி. எஸ். நாராயணன் டைரக்ட் செய்வார். இசை விஸ்வநாதன்-ராமமூர்த்தி. ஸ்டுடியோ வாஹினி. வெகு விரைவில் செட்டுக்குப் போவதற்காக ஏற்பாடுகள் நடந்துவருகின்றன.

## மனோகருக்கு 'கலைமணி' பட்டம்

இலங்கேஸ்வரன் நாடகம் நடத்தி புகழ்பெற்று 'இலங்கேஸ்வரன்' என்ற பட்டத்தைப் பெற்ற நடிகர் ஆர். எஸ். மனோகர் 'கலைமணி' என்ற பட்டத்தையும் பெற்றார். இந்தப்பட்ட மளிப்பு விழா சென்றவாரம் நடைபெற்ற 'உபகுப்தன்' நாடகத்தின்போது, சென்னை சட்ட மன்றத் தலைவர் டாக்டர் யு. கிருஷ்ணாராவ் அவர்களால் அளிக்கப்பட்டது.

திருவல்லிக்கேணி நடராஜா கல்விக் கழக கட்டிட நிதிக்காக சென்ற 22ந்தேதியன்று என். கே. டி. கலா மண்டபத்தில் மனோகரின் 'உபகுப்தன்' நாடகம் நடத்தப்பட்டது. அந் நாடகத்திற்கு ஜெமினி கணேசன் தலைமை வகித்தார். கட்டிட நிதிக்காக மனோகர் ரூ. 201. நன்கொடையளித்தார்.

நடராஜா கல்விக் கழக கட்டிட நிதிக்காக 'உபகுப்தன் நாடகம் நடைபெற்றபோது எடுத்த படம்.

